REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 40 காசு



**தோழமை**

தோழமை மேலான ஓர் நிலை. பேதம் ஏற் படாத, ஏற்பட முடி யாத நிலை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**தடை எது?**

பண்டிதர்களுக்கு பகுத்தறிவு இல்லையே ஏன்? அவர்களுக்கு அறிவு இருக்கிறது. ஆனல் அவர்களது படிப்புபகுத்தறிவிற்கு தடையாக நிற்கிறது.

-தந்தை பெரியார்



மலர் 5 சென்னை 10—7—1981 வெள்ளி வெளியீடு 11—7—1981 சனி இதழ் 261

## கருணநிதி மீதான எரிசாராய ஊழல் புகார்களை

# சதாசிவம் கமிஷன் விசாரிக்கலாம்

## சட்டப் பரிசீலனைக்குப் பின் மத்திய அரசு முடிவு

புதுடெல்லி, ஜூலை 10- எரிசாராய புகார் குறித்து விசாரணை நடத்த மாநில அரசுகள் நியமித்துள்ள விசாரணைக் கமிஷன்கள் செயல்படலாம் என்ற முடிவுக்கு மத்திய அரசு வந்துள்ளது. மாநில அரசு கமிஷன் செல்லாது என்பதற்கு சட்டவிதி ஏதும் இல்லை என்று சட்டப் பரிசீலனைக்குப் பின் மத்திய அரசு முடிவுக்கு வந்துள்ளது.

இந்தச் செய்தி குறித்து இன்றைய 'இந்து' பத்திரிகையில் வந்துள்ள செய்தி விவரம் வருமாறு:—

இ. காங்கிரஸ் அல்லாத அரசுகளுக்கு எதிராக அவசரப்பட்டு எந்த நடவடிக்கையும் எடுக்கப்பட மாட்டாது என்ற முடிவுக்கு மத்திய அரசு வந்துள்ளது.

எரிசாராயப் புகார்கள் குறித்து விசாரணை நடத்த தமிழ்நாடு அரசும் கேரள அரசும் நியமித்துள்ள விசாரணைக் கமிஷன் விஷயத்திலும் கூடசட்டப்படியே மத்திய அரசு நடந்து கொள்ள விரும்புகிறது.

### வற்புறுத்த விரும்பவில்லை

அந்த விசாரணையை நிறுத்துமாறு மாநில அரசுகளை சட்ட விரோதமான முறையில் வற்புறுத்த மத்திய அரசு விரும்பவில்லை என்று அதிகாரப்பூர்வமான வட்டாரம் தெரிவித்தது.

தமிழ்நாடு, கேரளம் ஆகிய மாநில அரசுகள் நியமித்துள்ள விசாரணைக் கமிஷன்களைக் கலைக்கச் சொல்லும் எண்ணம் மத்திய அரசுக்கு இல்லை.

ஏனென்றல் தற்போதுள்ள சட்டப்படி அவ்வாறு மாநில அரசுகள் தாங்கள் நியமித்த விசாரணைக் கமிஷனைக் கலைக்க வேண்டியதில்லை என்று தெளிவாக விதி உள்ளது.

### அர்த்தமற்றது

இந்த நிலையில் மாநில விசாரணைக் கமிஷனைக் கலைக்கச் சொல்வது அர்த்தமற்றது என்று மத்திய அரசு கருதுகிறது.

சட்ட நிபுணர்கள் சட்டம் பற்றி ஆலோசனை நடத்திய பிறகு அவர்கள் சொன்ன கருத்தின் அடிப்படையில் மத்திய அரசு இப்போது எடுத்துள்ள முடிவு இது.

மத்திய அரசு விசாரணை கமிஷன் நியமிக்கவும் உரிமை உள்ளது. இவ்வாறு மத்திய அரசு விசாரணைக் கமிஷன் அமைத்து விட்டதால் மாநில அரசின் விசாரணைக் கமிஷன் செல்லாது என்று கூறுவதற்கு சட்டத்தில் இடமில்லை என்று மத்திய அரசின் சட்ட நிபுணர்கள்கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்.

விசாரணைக் கமிஷன் பற்றிய சட்டவிதி முறைகளை ஆராய்ந்த பின் புதிதாக மத்திய அரசு மேற்கொண்டுள்ள நிலை இது என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு 'இந்து' பத்திரிகையில் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

---

பாகிஸ்தானின் நவீன போர் கருவிகள்-விமானங்கள்:

## எச்சரிக்கையுடன் இருப்பதாக பிரதமர் இந்திரா பேட்டி

### அணுஆயுத தயாரிப்பு பற்றியும் விளக்கம்

புதுடெல்லி, ஜூலை 10. பாகிஸ்தான் நவீன போர் விமானங்களையும் கருவிகளையும் பெறுவதை அடுத்து இந்தியா எச்சரிக்கையுடன் இருப்பதாக பிரதமர் இந்திரா தெரிவித்துள்ளார்.



பிரதமர் இந்திராகாந்தி இன்று நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

ஏராளமான இந்தியப் பத்திரிகையாளர்களும் வெளி நாட்டுப் பத்திரிகையாளர்களும் கலந்து கொண்ட இந்தப் பேட்டி நிகழ்ச்சி 80 நிமிட நேரம் நீடித்தது.

இந்தப் பேட்டியில் பிரதமர் இந்திரா கூறியிருப்பதாவது:

இந்தியாவில் தற்போதுள்ள ஆட்சி முறையை மாற்றியமைக்கக் கூடிய வகையில் இந்திய அரசியல் சட்டத்தை திருத்த அரசு ஆலோசிக்கவில்லை. இதற்காக அரசு கமிட்டி எதையும் நியமிக்கவில்லை.

பாகிஸ்தான் அணு ஆயுதங்களைத் தயாரித்தாலும் கூட இந்தியா அணு ஆயுதங்களைத் தயாரிக்காது.

பாகிஸ்தான் மிகசக்தி வாய்ந்த எப்.16ரக போர் விமானங்களை பெறுவது குறித்து இந்தியா தனது ஆழ்ந்த கவலையைத் தெரிவித்துக் கொள்கிறது.

இதன் மூலம் இந்தத்துணைக் கண்டத்தில் ஆயுதப் போட்டி ஏற்படக் கூடும்.

இந்த நேரத்தில் நம்மால் எந்த அளவிற்கு முடியுமோ அந்த அளவிற்கு விழிப்புணர்ச்சியோடும் எச்சரிக்கையோடும் இருந்து வருகிறோம்.

பாகிஸ்தான் நாட்டு மக்கள் வளத்தோடு வாழ வேண்டும் என விரும்பு

(8-ம் பத்தி பாரக்க)

---

### 62-வது பிறந்தநாள்:

## பெரியார் அண்ணா சிலைகளுக்கு நாவலர் மாலை அணிவிப்பு

சென்னை, ஜூலை 10— நிதி அமைச்சர் டாக்டர் நாவலரது 62-வது பிறந்த நாளை ஒட்டி நாளை காலை 7 மணிக்கு தந்தை பெரியார் சமாதிக்கும், பேரறிஞர் அண்ணா சமாதிக்கும் சென்று மலர் வளையம் வைப்பார்.

பிறகு அண்ணா சாலையின் உள்ள அண்ணா சிலைக்கும், அண்ணா மேம்பாலம் அருகே இருக்கும் அய்யா சிலைக்கும் மாலை அணிவிப்பார்.

அப்போது கழகத் தோழர்கள் திரண்டு வருமாறு விழாக்குழுவினர் வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

---

(2-ம் பத்தி தொடர்ச்சி)

கிறோம். அவர்களோடு சமாதானமாகவே வாழ விரும்புகிறோம்.

பாகிஸ்தான் மிக நவீன போர் கருவிகளை பெறுவது குறித்து இந்திய நாட்டு மக்கள் அனைவரும் பெரும் கவலை கொண்டுள்ளனர்.

### பிரிவினை சக்திகள்

நாட்டில் பிரிவினை சக்திகள் இயங்குவது பற்றி மத்திய அரசு தீவிரமாக கண்காணித்து வருகிறது.

### சமையல் எண்ணை இறக்குமதி

வெளி நாடுகளிலிருந்து கோதுமை, சர்க்கரை, சமையல் எண்ணைபோன்ற அத்யாவசிய உணவுப் பொருட்களை இறக்குமதி செய்ய அரசு திட்டமிட்டுள்ளது.

வெளிநாட்டில் இருந்து கோதுமை இறக்குமதி செய்வதில் தவறில்லை.

அத்தியாவசிய உணவுப் பொருட்கள் கையிருப்பை அதிகப்படுத்தி பதுக்கல் காரர்கள் செயல்களைத் தோற்கடிக்க வேண்டும் என்பதுதான் அரசின் நோக்கம்.

இவ்வாறு பிரதமர் இந்திராகாந்தி கூறினர்.

மத்திய அமைச்சர்கள் குறித்து கர்நாடக முதல்வர் குண்டுராவ் பேசியது பற்றி ஒரு நிருபர் கேட்டபோது, பிரதமர் இந்திரா, குண்டுராவ் மன்னிப்பு கோரியுள்ளதாக குறிப்பிட்டார்.

---

பெங்களூர் சம்பவம் நடக்காதிருக்க

# பாட்டில்களில் அடைத்த சாராயம் விற்பனை: எஸ். டி. எஸ். அறிவிப்பு

சென்னை. ஜூலை 10- பாட்டில்களில் அடைக்கப்பட்ட சாராயம் தான் விற்கப்படும். பெங்களூரைப் போல நடந்து விடக் கூடாது என்பதில் அரசு எச்சரிக்கையாக இருக்கிறது. கட்டாய பெர்மிட்முறை கடைப்பிடிக்கப்படும் என்று அமைச்சர்எஸ். டி. எஸ். கூறினர்,

வருவாய்த்துறைஅமைச்சர் எஸ்.டி.எஸ். இன்று நிருபர்களுக்கு பேட்டி அளிக்கையில் கூறியதாவது:

சாராயத்தை மொத்த வியாபாரம் செய்பவர்களுக்கு லைசென்சுகள் வழங்கிக் கொண்டு இருக்கிறோம். இன்னும் 3 அல்லது 4 தினங்களுக்குள் அனைவருக்கும் வழங்கப் பட்டு விடும்.

சில்லறையாக சாராயத்தை விற்கும் கடைகள் அரசு நிர்ணயித்துள்ள விதிமுறைக்கு உட்பட்ட இடங்களில் தான் இருக்க வேண்டும்.

பள்ளிக்கூடம், கோயில், மக்கள் நெருக்கடி மிகுந்த இடங்களில் கடைகள் இருக்கக் கூடாது என்று விதி இருக்கிறது.

### மாறுன கடைகள்

அப்படி எங்காவது கடை திறக்கப்பட்டு இருக்கிறது என்று பொது மக்களிடம் இருந்து புகார் வந்தால் உடனடியாக நடவடிக்கை எடுத்து அந்தக் கடையை வேறு இடத்தில் மாற்ற வேண்டிய நிலையை உருவாக்குவோம்.

இதற்காகத்தான் முதலில் சில்லறைசாராயக் கடைகளுக்கு ஒரு மாதத்திற்கு மட்டுமே தற்காலிக அனுமதிவழங்கப்படுகிறது.

புகார்கள்எதுவும் இல்லை என்றல் நிரந்தர உரிமை வழங்கப்படும்.

சாராயத்தை பாட்டில்களில் அடைத்துவிற்கும் முறை கூடாது; பர்மிட் முறையை ரத்து செய்ய வேண்டும் என்று கேட்டார்கள்.

அப்படிப் பாட்டிலில் அடைத்து விற்பதை ரத்து செய்தால் சமீபத்தில் பெங்களூரில் நடைபெற்றது போன்ற அசம்பாவிதங்கள் நடைபெறலாம்.

தவறுகளுக்கு அது வழி வகுக்கும். ஆகவே பாட்டிலில தான் அடைத்து விற்பனை செய்யப்படும்.

பெர்மிட் முறையைரத்து செய்வது என்பது இயலாதுசாராயம் அடைப்பது மற்றும் விநியோகிப்பது போன்றவற்றிற்கு அனுமதி வழங்கும் பணிகள் துரிதமாக நடை பெற்றுக் கொண்டு இருக்கின்றன.

அரசு குறிப்பிட்டகாலத்தில் கடைகள் திறக்கப் படும்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினர்,

### அதிகாரிகட்கு உத்தரவு

அமைச்சர் எஸ்.டி.எஸ். மேலும் கூறியதாவது:

பள்ளி மாணவர்களுக்கு தேவையான ஜாதிச் சான்றிதழ், வருமானசான்றிதழ்களை வழங்குவதில் எந்தவித தாமதமும் இருக்ககூடாது. ஜாதி சான்றிதழ் போன்றவற்றை மாணவர்கள் கேட்கும் அன்றைய தினமே கொடுத்துவிட வேண்டும் என்று வருவாய்த் துறை அதிகாரிகளை நான்கேட்டுக் கொள்கிறேன்.



### கிராம அதிகாரிகள்

அப்படி எங்காவது காலதாமதம் ஏற்படுகிறது என்பது என் கவனத்திக்கு கொண்டு வரப்படுமேயானல் உடனடியாக அதற்கு வேண்டிய மாற்று ஏற்பாடுகள் செய்யப்படும்

கிராம அதிகாரிகள் நியமனத்திற்கு தேவையான ஏற்பாடுகளை அரசுசெய்து கொண்டு இருக்கிறது. அதற்காக தேர்வுகள் நடை பெற்றுக் கொண்டு இருக்கின்றன.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினர்.

---

### குஜராத்தில் ஒரு ஆயாராம் கயாராம்

காந்திநகர், ஜூலை 10. குஜராத்தில் கட்சிமாறும் விஷயத்தில் ஒரே நாளில் ஒரு எம். எல். ஏ. ஒரு சாதனை புரிந்துள்ளார்.

குஜராத் சட்ட சபையில் உமாகாந்த் ஜோஷி ஜனதாக் கட்சியைச் சேர்ந்தவர்.

இவர் திடீரென்று7-7-81 அன்று காலை ஜனதாவில் இருந்து இந்திரா காங்கிரசில்சேருவதாக அறிவித்து இந்திராகாங்கிரசில் சேர்ந்தார்.

பிற்பகல் சபை கூடிய போது அந்த எம். எல். ஏ. இந்திரா காங்கிரசில் இருந்து விலகி மீண்டும் ஜனதாவில் சேர்ந்து விட்டார்.

இந்திரா காங்கிரசுக்கு வந்த வரவு நட்டமாயிற்று. ஆனலும் வேறு ஒரு சுயேச்சை உறுப்பினர் இந்திரா காங்கிரசுக்கு வந்து அந்த நட்டத்தை சரிக்கட்டி விட்டார்,

---



---

## மக்வானு பிரச்சினை முற்றுப்பெற்றது: ப. உ. ச. அறிக்கை

சென்னை, ஜூலை 10— மத்திய அமைச்சர் மக்வானு பற்றிய பிரச்சினைக்கு முற்றுப் புள்ளி வைத்தாகிவிட்டது. இனியாரும் அவர் பற்றி கருத்துக் கூறவேண்டாம் என்று ப.உ.ச வேண்டுகோள் விடுத்திருக்கிறர்.



கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது;

மத்திய உள்துறை ராஜாங்க அமைச்சர் திரு. யோகேந்திர மக்வானு அவர்கள் தெரிவித்த கருத்துக்கு முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் அளித்த பதிலோடு அந்த பிரச்னைக்குஒருமுற்றுபுள்ளி வைத்துவிட்டதாக அறிவித்திருக்கிறர்கள். அருள் கூர்ந்து யாரும் இதற்கு மேல் எந்த வித கருத்தும் இதுகுறித்து தெரிவிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு ப.உ.ச. தமது அறிக்கையில் கூறியிருக்கிறர்.

---

பிரதமர் இந்திரா அறிவிப்பு:

### மத்திய அமைச்சரவை விஸ்தரிப்பு இப்போதைக்கு கிடையாது.

புதுடெல்லி, ஜூலை 10— மத்திய அமைச்சரவை விஸ்தரிப்பு இப்போதைக்கு இல்லை என்று பிரதமர் இந்திரா காந்தி நிருபர்கள் கூட்டத்தில் கூறினர்.

அமைச்சரவை விஸ்தரிப்பில் தாமதம் ஏன்? அடுத்த மாதம் மழைக்கால தொடருக்கு முன்பு அமைச்சரவை விஸ்தரிப்பு இருக்குமா என்று நிருபர்கள் கேட்டனர்.

அப்படிப்பட்ட யோசனை எதுவும் இல்லை. ஆகவே இதில் தாமதம் என்ற கேள்விக்கு இடம் இல்லை என்று கூறினர்.

அரசு மெத்தனப் போக்கு:

# புதுவை மத மாற்ற விவகாரம்: ஆளும் கட்சியினரே புகார்

பாண்டிச்சேரி, ஜூலை 10—ஆதிதிராவிட மக்களின் கோரிக்கைகள் தீர்க்கப்படாததால் அவர்கள் மதம் மாறும் நிலை ஏற்பட்டுள்ளது என்று புதுவை ஆளும் கட்சி எம்.எல்.ஏ.க்கள் புகார் செய்துள்ளனர்.

பாண்டிச்சேரியில் திம்ம நாயக்கன் பாளையத்தில் 1500 ஆதி திராவிட மக்கள் முஸ்லிம்மதத்துக்கு மாற இருக்கிறார்கள்.

இது சம்பந்தமாக பாண்டிச்சேரி ஆளும் கட்சி எம்.எல்.ஏக்களும் எதிர்க்கட்சி எம்.எல்.ஏக்களும் புகார் செய்துள்ளனர்.

உடனடியாக புதுவை அரசு ஆதி திராவிட மக்களின் பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தியுள்ளனர்.

இது சம்பந்தமாக தி.மு.க. எம்.எல்.ஏ. பி. மூர்த்தியும் அறிக்கை வெளியிட்டுள்ளார்.

ஜனதாத் தலைவர் உத்திரவேலு வெளியிட்டுள்ள அறிக்கையில் அவர்களது கோரிக்கைகள் நீண்ட காலமாகத் தீர்க்கப்படாததால் அவர்கள் மதம் மாறமுடிவு செய்துள்ளனர் என்று குறிப்பிட்டுள்ளார்.

அரிஜனங்கள் மதம்மாற இருப்பதாகக் கூறுவது உண்மைக்குப்புறம்பானது என்று சமீபத்தில் புதுவை உள்துறை அமைச்சர் சவுரிராஜன் கூறி இருந்தார்.

அவர் கூறியது பொய் என்பதை ஆளும் கட்சியினரே இப்போது தெளிவுபடுத்தி விட்டனர்.

(முன் வந்த செய்தி 3ம் பக்கம் பார்க்க)

தாம்பரத்தில்

## கழகப் பொதுக் கூட்டம்

சென்னை, ஜூலை 10—தாம்பரம் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் சார்பாக மாபெரும் கழகப் பொதுக்கூட்டம் நாளை 11-ந் தேதி மாலை 6 மணி அளவில் தாம்பரம் பாரதி திடலில் சோமவரதராசன் தலைமையில், நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் மதுரை இளவரசன், புலவர்வேதா தீப்பொறி தம்பிசிவம், ராசமாணிக்கம், ஏ. சு. மணி, லக்ஷ்மிமுத்து, சுந்தரம், துரைவேல், ராஜகோபால், கணேசன், ரஷீத் மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

### நெல்லை

11-7-81 சனி மாலை 7 மணிக்கு நெல்லை சந்திப்பு அண்ணா சிலை அருகில் எஸ். எம். எஸ். ஜாலி தலைமையில் பேசுவோர்:

பா. வளர்மதி, கருப்பசாமி பாண்டியன் எம் எல் ஏ, இளமதி, முருகேசன், சுல்தான், சுப்பையா பிள்ளை, பாலன், ராமலிங்கம், பேச்சியப்பன், வேல்சாமி, சுபேதார் மற்றும் பலர்.

### திருமழிசை

12-7-81 ஞாயிறு காலை 10 மணிக்கு புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற செயற்குழு ஆலோசனைக் கூட்டம் டி. கே. திருவேங்கடம் தலைமையில் நடைபெறுகிறது. அனைவரும் கலந்து கொள்ளுமாறு செ. மாசிலாமணி கேட்டுக் கொண்டுள்ளார்.

குடியாத்தத்தில்

## கழகப் பொதுக் கூட்டம்

குடியாத்தம் ஜூலை 10. குடியாத்தம் தொகுதி அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் சார்பாக மாபெரும்பொதுக்கூட்டம் இம்மாதம் 18ந் தேதி சனிக்கிழமை மாலை 6 மணி அளவில் குடியாத்தம் குளக்கரை திடலில் ஆர். ஏ. கிருஷ்ணன் தலைமையில், வீ. கு. சபாபதி முன்னிலையில்நடைபெறுகிறது. இக்கூட்டத்தில்வலம்புரி ஜான், ரகுநாதன், விசுவநாதன், கிருஷ்ணன், மெய்ஞானம், பட்டு பார்த்தசாரதி, வெல்டர் மணி மற்றும் பலர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

## கழகத் தோழரின் அன்னையார் மரணம்

சென்னை, ஜூலை 10—தியாகராயநகர் தொகுதி 119-வது வட்டத்தைச் சேர்ந்த கழக மாவட்டப் பிரதிநிதி எஸ்.பாண்டியனின் அன்னையார் காசியம்மாள் நேற்று மரணமடைந்தார். கடந்த சில நாட்களாக அவர் உடல் நலக்குறைவாக இருந்து வந்தார்.

காசியம்மாளின் இறுதி ஊர்வலம் இன்று மாலை 4 மணிக்கு நடக்கிறது. கண்ணம்மா பேட்டை சுடுகாட்டில் உடல் அடக்கம் செய்யப்படுகிறது.

Published by K. Ravindran on behalf of Thangaman) Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029. Editor: E. PARASURAMAN

நியூ இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி அதிகாரிகள் முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்துப் பேசினா மோகனரங்கம் எம் பி, யு உடனிருந்தார்.

குடந்தையில்

## பொதுமக்கள் புகார்: அமைச்சர் ராகவானந்தம் உடனடி நடவடிக்கை

சென்னை, ஜூலை 10—கும்பகோணம் மருதாஞ்சேரி பகுதியிலுள்ள குடிநீர் கைப்பம்புகள் சரிவர வேலை செய்வதில்லை என்று அமைச்சர் ராகவானந்தத்திற்கு வந்த புகாரை யொட்டி அமைச்சர் அப்பகுதிக்கு நேரில் சென்று விசாரணை நடத்தினார்.

அப்போது அப்பகுதியிலிருந்த மொத்தம் 61கைப் பம்புகளில் 44 கைப் பம்புகளே சரியாக இயங்கிக் கொண்டிருந்தன.

இதையெட்டி அமைச்சர் சம்பந்தப்பட்ட அதிகாரிகளை வரவழைத்து உடனடியாக சரிசெய்யுமாறு உத்தர விட்டார்.

ஒரு மணி நேரத்தில் அந்த கைப் பம்புகள் அனைத்தும் சரிசெய்யப்பட்டன. மேலும் சரியில்லாதசிலகைப்பம்புகளையும் இன்னும் சில நாட்களில் சரி செய்து தருவதாக சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அமைச்சரிடம் தெரிவித்தனர்.

இவ்வளவு விரைவில் அமைச்சர் நடவடிக்கை எடுத்ததற்கு அப்பகுதி மக்கள் அமைச்சருக்கும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் நன்றி தெவித்தனர்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

இருந்து இறங்கிதிருச்சிக்கு வந்துவிட்டார்களாம்.

தஞ்சாவூருக்கு டிக்கெட் வாங்கியிருந்தும் அந்தப் பெண்கள் செங்கிப்பட்டியிலேயே இறங்கி விட்டார்கள்.

கைதான 3 பெண்களும் போலீசில் ஒப்புதல் வாக்கு மூலம் கொடுத்திருக்கிறார்கள்.

அவர்களிடம் இருந்து ரூபாய் 25 ஆயிரம் பெறுமானம் உள்ள நகைகளையும் போலீசார் மீட்டனர்.

போலீசார் மேலும் விசாரணை செய்து வருகிறார்கள்.

பினுமி காங்கிரஸ் ஆகிவிட்ட

# தி. மு. க.வுக்கு 600 பேர் முழுக்கு: கழகத்தில்சேர்ந்தனர்

தஞ்சை, ஜூலை 10—தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த 600 தி.மு.க.வினர் அக்கட்சியிலிருந்து விலகி அமைச்சர் ராகவானந்தம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

தஞ்சை மாவட்டம் குடவாசல் ஒன்றியத்திலுள்ள மருதாஞ்சேரியில் கழகக் கொடியேற்று விழா நடைபெற்றது.

ஒன்றியத்தலைவர் பாபா சுப்பிரமணியம் தலைமையில் ராமநாதன் முன்னிலையில் நடந்த இவ்விழாவில் அமைச்சர் ராகவானந்தம் கலந்து கொண்டு கழகக் கொடியை ஏற்றி வைத்தார்.

மற்றும் கழக தொழிற் சங்கப் பிரிவு செயலாளர் வை. பெருமாள், நன்னிலம் கலையரசன், அபிமுகமது, மாரியப்பன், சுப்பிரமணியம் ஆகியோர் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினர்.

அப்போது மருதாஞ்சேரியைச்சேர்ந்த300தி.மு.க.வினரும், கோவில்பட்டுவைச்சேர்ந்த 200 தி.மு.க.வினரும் ஆற்றங்கார் பகுதியைச் சேர்ந்த 100 தி மு கவினரும் அக்கட்சியை விட்டு விலகி அமைச்சர் ராகவானந்தத்திற்குமாலை அணிவித்து கழகத்தில் இணைந்தனர்.

மாரியப்பன், கருணாநிதி, ரவிதாசன், முருகன், ரவி. மகாலிங்கம், வீரராகவன், நடராஜன், நடேசன், பன்னீர ஆகியோர் உட்பட 600 தி. மு. க. வினர் அமைச்சர் ராகவானந்தத்திற்கு மாலை அணிவித்து கழகத்தில் இணைந்தனர்.

## சங்கீத கலைஞர்களுக்கு உதவி

சென்னை, ஜூலை 10—சங்கீதநாட்டிய கலைஞர்கள் பள்ளிகளுக்கு மான்யம் அளிக்க "தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம்" முன் வந்துள்ளது.

தகுதிவாய்ந்த கலைஞர்களுக்கு சங்கீத சபைகள் மூலமாக ஊக்கம் அளிக்கவும், சங்கித-நடனபயிற்சிப் பள்ளிகளுக்கு உதவி மான்யமும் அளிக்கப்பட உள்ளது.

இதனை பயன்படுத்திக் கொள்ள விரும்புவர்கள் 'செயலாளர்' தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம், "தென்றல்" கிரீன் வேஸ் சாலை, சென்னை-28 என்ற முகவரிக்கு விண்ணப்பிக்க வேண்டும்.

கோரிக்கைகளை வலியுறுத்தி

## சென்னையில் ரெயில்நிலைய அதிகாரிகள் உண்ணாவிரதம்

சென்னை, ஜூலை 10—அகில இந்திய ரெயில்வே நிலைய அதிகாரிகள் சங்க சார்பில், பல்வேறு கோரிக்கைகளை வலியுறுத்தி மேற்படி சங்க சென்னை டிவிஷன் தலைவர் சந்திரசேகரன், உட்பட 3 பேர் இரண்டு நாளைய உண்ணாவிரதத்தை தொடங்கினார்கள்.

இன்று மாலை (10-ந் தேதி) அவர்கள் தங்கள் உண்ணாவிரதத்தை முடித்துக் கொள்கிறார்கள்.

பஞ்சாப் முதல்வருக்கு எதிரான

## இ. காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் கூட்டம்

சண்டிகார், ஜூலை 10. பஞ்சாப முதலமைச்சர் தாபருக்கு எதிராக உள்ளவர்கள் எனக் கருதப்படும் 12 இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏக்கள் பஞ்சாப் மாநில முன்னாள் அமைச்சர் குருதாசன்சிங் வீட்டில் "டின்னர் கூட்டம்" நடத்தினார்கள். மாநிலஅரசியல் நிலவரம்குறித்து இவர்கள் பேசியதாகக் கூறப்படுகிறது.

அடுத்த கூட்டத்தில் மேலும் பலர் கலந்து கொள்ளக்கூடும் என இக்கூட்டத்தில் கலந்து கொண்ட ஒருவர் தெரிவித்தார்.

இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டவர்கள் மத்திய அமைச்சர் ஜெயில்சிங், பூட்டாசிங் ஆகியோரின் ஆதரவாளர்கள் எனக் கூறப்படுகிறது.

## பொய்ச்செய்தி: முரசொலிக்கு எச்சரிக்கை

சென்னை, ஜூலை 10. 7-9-81 தேதிய முரசொலியில் 119வது வட்ட கழகச் செயலாளர் சாமிநாதன் மற்றும் கழக தோழர்கள் முத்து, பெருமாள் ஆகிய மூவரும் சேர்ந்து ஒருவரை அடித்ததாகவும் அதனால் அவர் இறந்து விட்டதாகவும் பொய்ச் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

இறந்த முனுசாமி என்பவர் குடித்துவிட்டு இறந்து கிடந்த உண்மை அந்த வட்டார மக்கள் அறிந்ததாகும். போலீசாரும் இதைக் கூறியிருக்கின்றனர்.

எனவே கழகத்தோழர்கள் மீதும், தன் மீதும் களங்கம் கற்பிக்க, பொய் செய்தி வெளியிட்ட முரசொலயும், மற்ற பத்திரிகைகளும் மறுப்பு வெளியிட்டு மன்னிப்புக் கேட்காவிட்டால் வழக்கு தொடருவோம் என்று 119 வது வட்டச் செயலாளர் கோ. சாமிநாதன் அறிவித்துள்ளார்.

# ஒரு பைத்தியத்தின் வாக்கு மூலம்!

பைத்தியம் பிடித்தவன் மற்றவர்களைப் பார்த்து சொல்கின்ற முதல் வார்த்தை 'உனக்குப் பைத்தியம்' என்பது தான்.

—திண்டிவனம் ராமமூர்த்தி

அ. தி. மு. க. அமைச்சரவையில் முதல் பைத்தியம் காளிமுத்துதான்!

— திண்டிவனம் ராமமூர்த்தி

★

உண்மையை ஒப்புக் கொண்டதற்கு நன்றி!

ஒரு நல்ல டாக்டரைப் பார்ப்பதுநலம்!

எஜமானா கருணாநிதியின் யோசனையைக் கேட்டுக்கேட்டுத்தான் இந்தநிலைக்கு வந்திருக்கிறார் திண்டிவனம் ராமமூர்த்தி.

இனியாவது சற்று ஒதுங்கியிருந்தால்-அதுவே ஒரு சிகிச்சையாகும்!

வியாதி முற்றிவிட்டால் வீதி சிரிக்கும்... அவ்வளவுதான் நாம் சொல்ல முடியும்!

வீர விளையாட்டில் பயங்கரம்

# ஜல்லிக்கட்டு மாடு முட்டித்தள்ளியது: மூவர் மரணம்

மதுரை, ஜூலை 10— ஜல்லிக்கட்டுப் போட்டியை வேடிக்கை பார்க்க வந்த இருவரை ஒரு காளை முட்டிக் கொன்றது அதே போல் பஸ்சுக்குக் காத்திருந்த ஒருவரும் ஜல்லிக்கட்டுக் காளை முட்டி மரணமடைந்தார்.

காரைக்குடியில் ஆண்டு தோறும் மழை வர வேண்டும் என்று கோரி இந்த ஜல்லிக்கட்டு போட்டி நடை பெறும். வழக்கம் போல் இந்த போட்டி நேற்று மாலை 3 மணி அளவில துவங்கியது.

இந்தப் போட்டியைப் பார்க்க அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து பல்லாயிரக் கணக்கானோர் வந்திருந்தனர்.

அப்போது ஆத்தாங்குடியைச் சேர்ந்த ஒருவர் தன் காளையின் கொம்பில் 1001 ரூபாயை முடித்து வைத்திருந்தார்.

இந்தக்காளையை அடக்கி பிடிப்பவர்கள் அந்தப் பணத்தை எடுத்துக் கொள்ளலாம் என்று தெரிவித்தார்.

உடனே அந்தக் காளையைப் பிடிக்க பலர் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள். ஆனால் அந்தக் காளையை யாரும்பிடிக்கமுடியவில்லை.

அப்போது திடீரென்று அந்தக் காளை கும்பலை நோக்கிப் பாய்ந்தது.

அங்கு நின்று கொண்டிருந்த கருப்பையா (வயது 26) என்ற ரிக்ஷா தொழிலாளியின் வயிற்றில் இந்தக் காளை முட்டியது. அவர் அந்த இடத்திலேயே குடல் சரிந்து மரண மடைந்தார்.

அந்தக்காளைதொடர்ந்து கும்பலில் புகுந்து எல்லாரையும் முட்டியது. அப்போது வேலு (வயது50) என்ற ஒருவரும் காளை முட்டியதில் மரணமடைந்தார்.

பிறகு எல்லோருமாக சேர்ந்து அந்த காளையை மடக்கி பிடித்தனர். அப்போதும் அந்த காளை திமிறிக் கொண்டே இருந்தது.

போட்டி முடிந்த பிறகு அந்தக் காளையை ஊருக்கு ஓட்டிச் சென்று கொண்டிருந்தனர். அப்போது பஸ் நிலையம் அருகே வரும் போது அந்த காளை திடீரென்று திமிறிக் கொண்டு ஓட ஆரம்பித்தது.

அப்போது அங்கு ஒரு திருமணத்தில் கலந்து கொண்டு சொந்த ஊருக்கு செல்ல பஸ்சுக்காக காத்திருந்த கோவிந்தராஜன் என்பவரை இந்தக் காளை முட்டியது. அவரும் அந்த இடத்திலேயே துடிதுடித்து இறந்தார்.

ராஜஸ்தான் முதல்வருக்கு ஆதரவாக

## பிரதமர் இந்திரா வீட்டுக்கு பேரணி

புதுடெல்லி, ஜூலை 10. ராஜஸ்தான் முதலமைச்சர் ஜெகந்நாத் பகாடியா மீது அம்மாநில இந்திரா காங்கிரசாரே ஊழல் புகார்களை தெரிவித்து அவரை பதவியில் இருந்து நீக்க கோரிவருவது தெரிந்ததே.

பகாடியா ஆதரவாளர்கள் பகாடியாவிற்கு தங்கள் ஆதரவை தெரிவித்து டெல்லியில் பிரதமர் இந்திராகாந்தி வீட்டிற்கு ஊர்வலமாக சென்றனர்.

ஆனால் ஊர்வலத்தினர் பிரதமரை சந்திக்க இயலாமல் திரும்பினார்கள்.

தலைமைக்கழக அறிக்கை எண்: 134-81

## சென்னை, கோவை, திருச்சி மாவட்ட கழகத்தோழர்களுக்கு

சென்னை, கோவை, திருச்சி மாவட்டங்களில் கழக வளர்ச்சிநிதிக்கென நடைபெற்ற கலைநிகழ்ச்சிகளுக்கான நன் கொடை சீட்டுக்களைப் பெற்றுச் சென்றவர்கள் தாங்கள் வசூலித்துள்ள தொகையுடன் வரவு செலவு கணக்குகளையும் மீதமுள்ள நன்கொடைச் சீட்டுக்களையும் இந்த அறிவிப்பு கண்ட ஒரு வார காலத்திற்குள் தலைமைக்கழகத்தில் ஒப்படைத்து கணக்குகளை முடிப்பதற்கு ஒத்துழைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
9—7—81

## அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை அச்சக நிதி

அச்சக நிதிக்கு என நன்கொடைச் சீட்டுக்களை வசூலுக்கென பெற்றுச் சென்றுள்ள கழகத்தோழர்களும் நண்பர்களும் தாங்கள் வசூல் செய்துள்ள தொகையை உடனடியாக மணியார்டர் அல்லது டிராப்ட் மூலமாக அனுப்பி வைத்து உதவும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்
செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை

சென்னை-14
9-7-81

# பஸ்களில் திருடியே பல வீடுகள் வாங்கிய பலேபெண்கள்கைது

திருச்சி, ஜூலை 10—ஓடும் பஸ்களில் ஏராளமான பணத்தையும் நகைகளையும் திருடி மாடி வீடுகளை வாங்கிய இளம் பெண்கள் 2 பேரை போலீசார் கைது செய்துள்ளனர். அவர்களிடம் இருந்து ரூபாய் 35 ஆயிரம் பெறுமானமுள்ள தங்க நகைகளும் மீட்கப்பட்டன.

பஸ்களில் பயணம் செய்பவர்களின் உடமைகளை தந்திரமாக திருடி இது வரை ஏமாற்றி வந்தஇந்த இளம் பெண்கள் கைது பற்றிய விபரமாவது:

கும்பகோணத்தைச் சேர்ந்த வழக்கறிஞர் சுப்ரமணியம். இவர் திருச்சயில் ஒரு திருமணத்தில் கலந்து கொண்டு விட்டு குடும்பத்துடன் திரும்பிக் கொண்டிருந்தார். நகைகளையும் பணத்தையும் ஒரு சூட்கேசில் வைத்து பஸ் சீட்டுக்கடியில் வைத்திருந்தார். ஆனால் அவை மாயமாய் மறைநதுவிட்டது.

இதுபற்றிய புகாரைத் தொடர்ந்து போலீசார் ஓடும் பஸ்களில் திருடும் கோஷ்டியைப் பிடிக்க ஒரு தனிப்படையை நியமித்தனர்.

இந்தப் படையினர் முதலில் காந்திஎன்றபெண்ணை (வயது 26) கைது செய்தனர். திருச்சி சென்டிரல் பஸ் நிலையத்தில் வாடிக்கையாக சுற்றிக் கொண்டிருக்கும் இந்த காந்தியிடம் விசாரணை செய்த போது பல திடுக்கிடும் தகவல்கள் தெரியவந்தன. அதைத் தொடர்ந்து அவளுடைய சகோதரி பத்மாவும், மற்றொரு உறவுக்காரப் பெண் பாக்கியம்மாளும் கைது செய்யப்பட்டனர்.

ஓடும் பஸ்களில் இந்தப் பெண்கள் பயணம் செய்து நைசாக மற்றப் பயணிகளின்பெட்டிகள் நகைகள் பணம் ஆகியவற்றை திருடி வந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

இப்படி திருடியே காந்தியும் பத்மாவும் மதுரை மாவட்டம் சக்குடி கிராமத்திலும் திண்டுக்கல் சென்னைஆகிய நகரங்களிலும் சில மாடி வீடுகளை வாங்கி வாடகைக்கு விட்டிருப்பதாக போலீசார்கூறினர்.

வழக்கறிஞர் சுப்ரமணியம் திருச்சியில் இருந்து தஞ்சாவூருக்கு பஸ் ஏறுவதைக்கண்டு காந்தியும் பத்மாவும் அவருடன் அந்த பஸ்சில் ஏறி நகைப் பெட்டியை யாருக்கும் தெரியாமல் திறந்து நகைகளையும் பணத்தையும் எடுத்துக்கொண்டு பஸ்சில்

(2-ம் பத்தி பார்க்க)

# பாகிஸ்தான் ராணுவம் சுட்டது: இந்திய காப்டன் சாவு

புதுடெல்லி, ஜூலை 10. இந்திய ராணுவத்தினர் மீது பாகிஸ்தான் ராணுவத்தினர் திடீர் என்று துப்பாக்கியால் சுட்டனர்.

இதில் இந்திய தரப்பு காப்டன் ஒருவர் இறந்து விட்டார். வேறு சில ராணுவவீரர்களும் காயம் அடைந்தனர்.

இந்த சம்பவம் பூஞ்ச் பகுதியில் நடந்தது.

இந்தியத் துருப்புக்கள் வழக்கமாக ரோந்து சென்று கொண்டிருந்தது. அப்போது பாகிஸ்தான் ராணுவத்தினர் திடீர் என்று இந்திய ராணுவத்தினர் மீது சுட்டனர்.

இதில் இந்திய காப்டன் ஒருவர் இறந்துவிட்டார்.

இந்திய ராணுவத்தினரும் திருப்பிச் சுட்டனர். இரண்டு மணிநேரம் இந்த மோதல் இருந்தது.

இறந்த காப்டன் உடல் ராணுவ மரியாதையுடன் தகனம் செய்யப்பட்டது

புதுவை தி. மு. க. முதல்வர் ஆதிதிரா..விடர்களை புறக்கணித்ததால்:

# 1500 பேர் மதம் மாறும் அபாயம்

## பிரதமரிடம் கழக எம்.பி. புகார் விசாரணை நடத்தவும் கோரிக்கை

**புதுடெல்லி. ஜூலை 10— பாண்டிச்சேரி அரசு ஆதிதிராவிடர்களை புறக்கணித்துவிட்டதாகவும் அதனால் சுமார் ஆயிரத்து 500 பேர் முஸ்லிமகளாக மதம் மாறிவிட இருப்பது பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்றும் பிரதமா இந்திரா காந்திக்கு கழக எம்.பி. வி. பி. முனுசாமி கோரிக்கை விடுத்துள்ளார்.**

பாண்டிச்சேரி மாநிலத்தில் தி. மு. க. இந்திரா காங்கிரஸ் கூட்டாக ஆட்சி செய்து வருகிறது. இந்த அரசு ஆதிதிராவிடர்களை புறக்கணிப்பு செய்து வருவதாக ஆதிதிராவிட தலைவர்கள் புகார் செய்திருக்கிறார்கள்.

இதுகுறித்து வி.பி.முனுசாமி எம்.பி. பிரதமர் இந்திராகாந்திக்கு மகஜர் ஒன்றை அனுப்பியிருக்கிறார்.

அந்த மகஜரில் கூறப்பட்டிருப்பதாவது!

பாண்டிச்சேரி முதலமைச்சர் அந்தமாநிலத்தில் உள்ள ஆதிதிராவிடர் நலன்களை பாதுகாப்பதற்கு தவறி விட்டார். குறிப்பாக நீர்ப்பாசனம், நிலத்தகராறு ஆகியவற்றை சுமுகமாக தீர்ப்பதற்குஅவர்எந்தவிதமான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை. தவிர அரசுப் பணிகளில் உள்ள ஆதிதிராவிட மக்கள் பழிவாங்கப்படுகிறார்கள். இது பற்றி மத்திய உள்துறை அமைச்சரிடம மனு கொடுக்கப்பட்டிருக்கிறது.

பாண்டிச்சேரி மாநிலத்தில் ஆதிதிராவிடர்கள் புறக்கணிப்பட்டு வருவதால் சுமார் ஆயிரத்து 500 பேர் முஸ்லிம மதத்துக்கு மாறிவிடும் நிலைமை ஏற்பட்டுள்ளது. இது பற்றி உடனடியாக விசாரணை செய்ய பிரதமர் உத்தரவிட வேண்டும்.

இவ்வாறு இந்திரா காந்திக்குமுனுசாமிஎம்.பி. கோரிக்கை விடுத்துள்ளார்.

தமது கோரிக்கைகளை பிரதமர் பொறுமையுடன் கேட்டார் என்றும், இது பற்றி ஆவன செய்வதாக பிரதமர் உறுதி கூறியதாகவும் முனுசாமி தெரிவித்தார்.

## குற்றப்பிரிவு புலனாய்வுத் துறை டி. ஐ. ஜியாக ராஜசேகரன் நியமனம்

சென்னை, ஜூலை 10— தமிழக ரயில்வே மற்றும் ஆயுதப்படை துணைஇன்ஸ்பெக்டர் ஜெனரல்பொறுப்பில்இருக்கும் கே.கே,ராஜசேகரன் நாயர் தமிழக குற்றப்பிரிவு புலனாய்வுத் துறை துணை இன்ஸ்பெக்டர் ஜெனரலாக மாற்றப்பட்டுள்ளார்.

தற்போது குற்றப்பிரிவு புலனாய்வுத் துறை துணை இன்ஸ்பெக்டர் ஜெனரல் பொறுப்பில் இருக்கும் ராகவன் வெளிநாடு படிப்பிற்காக விடுமுறையில் செல்கிறார்.

இவ்வாறு அரசு அறிக்கை ஒன்றில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

புயல், வெள்ள நிவாரணம்:

## கழக அரசுக்கு உலக வானிலை நிபுணர் பாராட்டு

**சென்னை, ஜூலை 10—புயல் மற்றும் வெள்ள நிவாரணப் பணிகளுக்கான முன் ஏற்பாடுகளை கழக அரசு சீரான முறையில் செய்து வருகிறது என்று உலக வானிலை ஆராய்ச்சி நிபுணர் டாக்டர் ராபர்ட் எல். சதர்ன் பாராட்டு தெரிவித்துள்ளார்.**

புயல், வெள்ளம் போன்ற இயற்கை சீற்றத்துக்கு பெரும்பாலும் கடலோரப் பகுதி மக்களே பாதிப்புக்குள்ளாகி வருகிறார்கள். அப்படிப்பட்ட பாதிப்புகள் ஏற்படாமல் மக்களை பாதுகாக்கும் பொருட்டு தமிழக அரசு எச்சரிக்கையுடன் முன்னேற்பாடுகளைச் செய்துவருகிறது.

தமிழக கடலோரப்பகுதிகளான செங்கற்பட்டு, தென்னாற்காடு, தஞ்சாவூர் புதுக்கோட்டை, ராமநாதபுரம் முதலிய மாவட்டங்களில் பாதுகாப்பு இல்லங்களை அரசுஏற்படுத்தியிருக்கிறது.

இந்திய செஞ்சிலுவைச் சங்கம், ஐரோப்பியபொருளாதார சமுதாயம், அனைத்துலக குழந்தைகள் நிதி, மகாராஷ்டிர புயல் நிவாரணக்குழு ஆகியவை இதற்கு நிதி உதவி செய்துள்ளன: இத்துடன் தமிழக முதல் அமைச்சர் நிதியிலிருந்தும் நிதி உதவி அளிக்கப்பட்டு இந்தப்பாதுகாப்பு இல்லங்களை தமிழக அரசு அமைத்துள்ளது. கட்டப்பட்டு வரும் 82புயல் பாதுகாப்பு இல்லங்களில் இதுவரை 41 இல்லங்கள் கட்டி முடிக்கப்பட்டுவிட்டன.

உலக வானிலைஆராய்ச்சி நிறுவனத்தின் தலைமை தொழில் நுட்ப ஆலோசகர் டாக்டர் எல். சதர்ன் கடந்த மாதம் தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்து செங்கற்பட்டு மாவட்டத்தில் கட்டப்பட்டுள்ள சில புயல், வெள்ள பாதுகாப்பு இல்லங்களை பார்வையிட்டார். புயல் மற்றும் வெள்ள நிவாரணப் பணிகளுக்காக முன் எச்சரிக்கையுடன் தமிழக அரசு சீரான பணிகளை செய்து வருவதாக டாக்டர் ராபர்ட் பாராட்டுத் தெரிவித்தார். புயல் பாதுகாப்பு இல்லங்கள் சிறந்த முறையில் தேவையான இடங்களில் கட்டப்பட்டு உள்ளன என்றும் அவர் பாராட்டினார்.

கழகப் பொதுச் செயலாளர் ப.உ.ச. முன்னிலையில் பூங்காநகர்த் தொகுதி 54வது வட்ட தி. மு. க. பிரமுகரும் தமிழ்நாடு எடை அளவு பழுது பார்ப்போர் சங்கத்தலைவருமான பழனிக் குமார கழகத்தில் சேர்ந்தார்.

எங்களைக் காட்டிக் கொடுத்தால்

பழிக்குப்பழி வாங்குவோம்

## கள்ளச்சாராய சிறு வியாபாரிகளிடம்மொத்த வியாபாரிகள் மிரட்டல்

**பெங்களூர். ஜூலை 10- பெங்களூரில் கள்ளச்சாராயம் விற்பனை செய்யும் சிறு வியாபாரிகள் எங்களைக் காட்டிக்கொடுத்தால் பழிக்குப்பழி வாங்குவோம் என்று சிறு வியாபாரிகளுக்கு மொத்த வியாபாரிகள் மிரட்டல் தெரிவித்துள்ளனர். இதனால் போலீஸ் விசாரணையில் சிறு வியாபாரிகள் மவுனம் சாதிக்கிறார்கள்.**

கள்ளச்சாராய நகராக மாறி இருக்கும் பெங்களூர் நகரில் எங்குமே இதுவரை நடந்து இராத அளவு சாராய சாவு ஏற்பட்டுள்ளது.

இது பற்றி பெங்களூர் போலீசார் தீவிரமாக புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

கள்ளச் சாராய சாம்ராஜ்ய சக்ரவர்த்தி என்று கூறப்படும் அமீர் சுல்தான் தலைமறைவாகி இருப்பதாக சொல்லப்படுகிறது.

### ஆட்கொல்லி வியாபாரி எங்கே?

ஆட்கொல்லி கள்ளச் சாராயத்தை கலவை நடத்தி விநியோகித்த மொத்த வியாபாரி யார் என்று போலீசார் தீவிரமாக விசாரணை நடத்தி வருகிறார்கள்.

சிறு வியாபாரிகள் பலர் கைது செய்யப்பட்டு இருக்கிறார்கள். அவர்களிடம் போலீஸ் தீவிரமாக புலன் விசாரணை நடத்தி வருகிறது.

கைதாகி இருக்கும் கள்ளச்சாராய சிறு வியாபாரிகள் மொத்த வியாபாரி பற்றிதகவல் சொல்ல மறுக்கிறார்கள்.

ஒரு சிலர் மட்டும்"அந்த விவரங்களை வெளியே சொன்னால் எங்களுக்கு தீவிர விளைவுகள் ஏற்படும். மொத்த வியாபாரிகள் எங்களைப் பழிக்குப் பழி வாங்கிவிடுவார்கள்"என்று விசாரணையில் தெரிவித்தனர்.

### மிரட்டலால் மவுனம்

மொத்த வியாபாரிகள் இப்படி மிரட்டி இருப்பதால் சிறு வியாபாரிகள் மவுனம் சாதிக்கிறார்கள். மொத்த வியாபாரிகள் பற்றிய தகவல் தர மறுக்கிறார்கள்.

இதற்கிடையே போலீசாரின் தீவிர வேட்டை தொடர்ந்து நடக்கிறது.

பெங்களூர் நகரின் தெற்குபகுதியில்போலீசார் தீவிர வேட்டை நடத்தினர்கள்.

கள்ளச் சாராயம் நிரப்பப்பட்ட 100 டியூப்புகள், பிளாடர்கள், டிரம்கள், பாத்திரங்களை கைப்பற்றியிருக்கிறார்கள்.

### ஆண்டுக்கு ரூ. 15 கோடி வியாபாரம்

பெங்களூர் நகரில் மறைமுகமாக கள்ளச் சாராய விற்பனை நடைபெற்றுவருகிறது.

இந்த வியாபாரத்தில் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 10 கோடி முதல் ரூ. 15 கோடி வரை வரவு செலவு நடப்பதாக சொல்லப்படுகிறது.

இதில் பல பெரும் புள்ளிகள் ஈடுபட்டு இருப்பதால் இந்த வியாபாரம் அமோகமாக நடைபெறுகிறது.

கள்ளச் சாராயத்தை கலக்கித் தயாரிக்கும் மொத்த வியாபாரிகள் நகரைசுற்றியுள்ளகிராமங்களில் ஸ்டாக்கை வைத்துக் கொண்டுள்ளனர்.

இவர்கள் நம்பிக்கைக்குரியசிறுவியாபாரிகளிடம் இதை விற்கிறார்கள். அதை அவர்கள் ஆங்காங்கு சிறு சிறு வியாபாரிகளுக்கு விற்கிறார்கள்.

யாராவது ஒரு சிறு வியாபாரி பெரிய வியாபாரி அனுமதி இல்லாமல் விற்க முடியாது. அப்படி விற்றால் அவர்கள் சங்கடத்திற்கு ஆளாக்கப்படுவார்கள்.

இப்படி ஏற்பட்ட தகராறுகள் 1979 முதல் பல நடந்துள்ளன.

### மூலப்பொருள் தாராளம

கள்ளச்சாராயம் தயாரிக்க மூலப் பொருள் தாராளமாகக் கிடைக்கிறது. கண்டசாரி சர்க்கரை தயாரிப்பாளர்களிடம் இருந்து மொலாசஸ் பெறுகிறார்கள்.

அம்மானியம் சல்பேட், அம்மானியம் நைட்ரேட், காப்பர் சல்பேட் போன்றவைகள் கிடைப்பதிலும் எந்த சிக்கலும் இல்லை.

'கிக்' அதிகம் வருவதற்காக வீணாகிப் போன பாட்டரி செல், கரப்பான் பூச்சி, அழுகிய முட்டை, காய்கறி, பழங்கள் மரப்பட்டைகளை போடுகிறார்கள். இதனால்கிக்அதிகம் கிடைப்பதாகச் சொல்லப்படுகிறது.

இப்படிப்பட்ட பொருட்களைக் கொண்டு சாராய சக்ரவர்த்திகள் கள்ளச் சாராயத்தை உற்பத்தி செய்து விற்று கோடிக்கணக்கில் சம்பாதிக்கிறார்கள்.

சாராய மன்னன் என்று அழைக்கப்படும் அமீர சுல்தானைப் பிடிக்க போலீசார் பெருமுயற்சி செய்து வருகிறார்கள்.

### அமீர்சுல்தான் கூட்டாளிகள் கைது

அமீர்சுல்தானின் கூட்டாளிகள் என்று சொல்லப்படும். அப்துல் சுபாங் (வயது 55), ரஷீத் (வயது 57) ஆகிய இருவர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

அமீர் சுல்தானின் கிடங்கில் இருந்து ஒரு பாரல் கள்ளச் சாராயத்தைக் கைப்பற்றி இருக்கிறார்கள்.

இந்த கிடங்கு ரஸ்ஸல் மார்க்கெட் அருகே இருக்கிறது. கடந்த இரண்டு நாட்களில் அமீர் சுல்தானுக்குச் சொந்தமான இடங்களில் சோதனை செய்யப்பட்ட 4வது இடமாகும் இது.

சுல்தானின் 4 சகோதரர்களும் கூட தலைமறைவாகி விட்டனர் என்று கூறப்படுகிறது.

சாராய சக்ரவர்த்தி என்று கூறப்படும் அமீர் சுல்தான் பற்றிய தகவல்களை பெங்களூர்போலீசார் வெளியிட்டுள்ளனர்.

2 ஆண்டுகளுக்குமுன்பு அமீர் சுல்தான் சர்க்கரை பேரத்தில் ஈடுபட்டார். பிறகு ஸ்பிரிட் வியாபாரத்திற்கு மாறினார். ஸ்பிரிட் கடத்தலில்சம்பந்தப்பட்டவர் இவர்.

அமீர் சுல்தானுக்கு 40 ஏக்கரில் தோட்டம் இருக்கிறது. இது பெங்களூரில் இருந்து 25 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது,

அதன் பக்கத்தில் ஒரு கெமிக்கல் பாக்டரியும் உருவாகி வருகிறது.

சதாசிவ நகரில் வீடு, இறக்குமதி செய்யப்பட்ட இரண்டு கார்கள் எல்லாம் இருக்கிறது என்று போலீசார் தெரிவித்தனர்.

விஷ சாராயம் குடித்ததால்

## மரணத்தின் வாசலுக்கு சென்று திரும்பியவர் மீண்டும்குடித்துசாவு

பெங்களூர், ஜூலை 10— விஷச் சாராயம் குடித்து மருத்துவமனையில் சிகிச்சை பெற்ற தொழிலாளி ஒருவர் அதிஷ்டவசமாக சுகத்துடன் வீடு திருப்பினார். ஆனால் மீண்டும் அவர் அந்த விஷ சாராயம் குடித்து பலியானார்,

கர்நாடக மாநிலத்தை மட்டும் அல்ல, இன்று இந்திய நாட்டையே பரபரப்புக்குள் ஆழ்த்தியிருப்பது பெங்களூரில் ஏராளமான பேர் விஷ சாராயத்திற்கு பலியாகி உயிர் துறந்த சம்பவம். இது வரை 311 பேர் அந்த ஆட்கொல்லிக்கு பலியாகியுள்ளனர்.

கட்டட மேஸ்திரியாக வேலைபார்ப்பவர்கோபால். (வயது 30) கடந்த திங்கட்கிழமை இவர் மற்றவர்களுடன் விஷ சாராயம் அருந்தியதால் பாதிக்கப்பட்டார், நண்பர்களே சிலர் அவரை பெரும்பாடுபட்டு மருத்துவமனையில் சேர்த்தார்கள். டாக்டர்களின் முயற்சியால் அவர் சுகம் பெற்று வீடு திரும்பினார்.

ஆனால் அவரை மீண்டும் விஷச்சாராயம் தன்பக்கம் இழுத்துக் கொண்டது. மீண்டும் கோபால் அந்த விஷசாராயத்தைகுடித்தார். விதி யாரை விட்டது? நேற்றுகாலை அவர்இறந்து போனார்.

முதன் முதலாக

## தமிழ் - ஜெர்மன் அகராதி

ஹைடில்பர்க்(மே. ஜெர்மன்) ஜூலை 9—முதன் முதலாக தமிழ் - ஜெர்மானிய மொழி அகராதி வெளியிடப்படுகிறது.

மேற்கு ஜெர்மனியில் உள்ளஹைடில்பர்க்பல்கலைகழகத்தின் தெற்கு ஆசியக் கழகம் விரிவான அளவில் இந்த அகராதியை வெளியிடுகிறது.

எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் தமிழ் அகராதி வந்துள்ளது.

முதன் முதலாக தமிழ் ஜெர்மானிய மொழி அகராதி இப்போதுதான் வருகிறது.

கழக தொழிற்சங்கம் அமைக்க

ஏற்பாடு செய்வதா?

## விக்கிரவாண்டி கழகப் பிரமுகர் மீது கொலைவெறித் தாக்கு

விக்கிரவாண்டி ,ஜூலை 10—விக்கிரவாண்டி நகர கழக துணைச்செயலாளர் ஆர் வேணுகோபாலைத் தாக்கி கொலை செய்ய முயற்சி நடந்துள்ளது. இதையடுத்து போலீசார் 6 பேரைக் கைது செய்து வழக்குப்பதிவு செய்துள்ளனர்.

இச்சம்பவம்பற்றி கூறப்படுவதாவது:-

தென்னாற்காடு மாவட்டம் விக்கிரவாண்டியில் உள்ள ஓர்பஞ்சாலையைச் சேர்ந்த தொழிலாளர்கள் சிலர் வேலைநீக்கம் செய்யப்பட்டார்களாம்.

இதையடுத்து தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்திற்கும் இடையேதகராறு ஏற்பட்டது.

இந்நிலையில் தொழிற்சாலையைச் சேர்ந்த தொழிலாளர்கள் பலரின் விருப்பத்திற்கு இணங்க அங்கு கழக சார்பில் தொழிற்சங்கம் ஒன்றை அமைப்பதற்கான முயற்சி நடந்தது.

இதையடுத்து தொழிற்சங்கம் அமைக்கும் முயற்சியில் ஈடுபட்ட விக்கிரவாண்டி நகர கழகதுணைச் செயலாளர் வேணுகோபாலையும் மற்றும் சிலரையும் மில் நிர்வாகத்தைச் சேர்ந்த ஒருவரும், மற்றும் சிலரும் சேர்ந்து கடுமையாகதாக்கி கொலை செய்ய முயற்சித்ததாகக் கூறப்படுகிறது.

தாக்குதலுக்கு ஆளான வேணுகோபால் நாகராஜன், சுந்தர மூர்த்தி, அல்லாபாட்சா, கோபி, டிரைவர் சுந்தரம். மாரி ஆகியோரில் வேணுகோபால் நாகராஜன அல்லாபாட்சா ஆகியோர் விழுப்புரம் அரசுமருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

இது தொடர்பாக போலீசார் வழக்குப் பதிவு செய்து, மில் மானேஜர் சுப்பையா உட்பட 6பேரை கைது செய்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

மாவட்ட கழகச் செயலாளர் ஹீராசந்த், கழக எம். எல். ஏ. கண்ணன் ஆகியோரும் மற்றும் பல்வேறு கட்சியினரும் கழக பிரமுகர்களும் தாக்குதலுக்கு ஆளான தொழிற்சங்கத் தலைவர்களைச் சந்தித்து ஆறுதல் கூறினார்கள்.

முதல்வர் புரட்சித்

தலைவர் தலைமையில்

## உக்கம்சந்த் சகோதரி திருமணம்

சென்னை, ஜூலை 10— கழக சட்டமன்ற உறுப்பினர் எஸ். டி. உக்கம் சந்தின் தங்கை உஷாகுமாரிக்கும், ஆரணி சாந்திலால் சௌகாரின் மகன் கௌதம் சந்திற்கும் இன்று (10-ந் தேதி) வெள்ளிக் கிழமை இரவு 8மணிக்கு மதுராந்தகம் அலங்கார்தியேட்டரில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் திருமணம் நடைபெறுகிறது. இத்திருமண விழாவில் அமைச்சர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள் சட்டமன்றஉறுப்பினர்கள், மேலவை உறுப்பினர்கள் மற்றும் வாரியத்தலைவர்கள், கழக முன்னணியினர் கலந்துகொண்டு மணமக்களை வாழ்த்துகின்றனர்.

# அண்ணா






ஸ்பெஷல் டிவிஷன் I
(அண்ணா நகர் மேற்கு)

## டெண்டர் அறிவிப்பு

ANW-SDI-D2-5488-80
தேதி 1-7-81

சென்னை-600101, மேற்கு சென்னை, அண்ணா நகர் விரிவு பகுதி 1ல் உள்ள தமிழ் நாடு அரசு ஊழியர்கள் வாடகை வீட்டு திட்டத்திற்கு ரூ. 1,88,500(ஒரு லட்சத்து எண்பத் தெட்டாயிரத்துஐந்நூறு)செலவில்பம்பு செட்டுகள் சப்ளை செய்து டெலிவரி செய்யும் வேலைக்கான, முத்திரையிட்ட டெண்டர்கள் நிர்வாகப் பொறியாளர், ஸ்பெஷல் டிவிஷன் I பாடி, சென்னை-101, அவர்களால்5-8-81 பிற்பகல் 3 மணி வரை பெற்றுக் கொள்ளப்படும். மேற்படி வேலைக்கான டேவணித் தொகைடெபாஸிட்ரூ.2,000

டெண்டர் நிபந்தனை, குறிப்பிட்ட பாரங்கள், டெண்டர் குறிப்புகள் ஆகியவை நிர்வாகப்பொறியாளர் (SDI) அலுவலகம், அவர்களிடமிருந்து நேரிலோ அல்லது ரூ. 20+வி.வரி+சர்சார்ஜ் (தபால் செலவு தனி) சேர்தது செலுத்தி தபால் மூலமோ28-7-81முதல்4-8-81 தேதிக்குள் காலை 11மணி முதல் பிற்பகல் 3 மணிக்குள் பெற்றுக்கொள்ளலாம்.

எல்லா டெண்டர்களையுமோ அல்லது ஏதாவது ஒரு டெண்டரையோ எவ்வித காரணமும் காட்டாமல்நிராகரிக்க கீழ்கையொப்பமிட்டவருக்குபூரணஉரிமைஉண்டு.

நிர்வாகப்பொறியாளர்
(SDI-ANW)

DIPR-38290 81-15



தமிழக கல்வி அமைச்சர் அரங்கநாயகம் அமெரிகா சென்ற போது சென்னை விமான நிலையத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் வழியனுப்பிவைத்தார்.

## பீகாரில் வெள்ள அபாயம்

பாட்னா, ஜூலை 10— பீகாரிலுள்ள 3 பெரும் நதிகளில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. பல கிராமங்கள் வெள்ளத்தில் மூழ்கியுள்ளன. அங்கு தொடர்ந்து மழைபெய்து வருகிறது.

உத்தரபிரதேசம்,மராட்டியம் ஆகிய மாநிலங்களிலும் பலத்த மழையினால் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டுள்ளது.

திருச்சி, சேலம், உதகையில்

# போலீசாருக்கு ரூ.1 கோடி செலவில் புதிய வீடுகள்

சென்னை, ஜூலை 10—போலீஸ்காரர்களுக்கு ஒரு கோடி ரூபாய் செலவில் திருச்சி, சேலம், உதகையில் புதிய வீடுகளைக் கட்டுவதற்கு தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

தமிழகத்தில் பணியாற்றும் போலீஸ்காரர்களுக்கு புதிய வீடுகள்கட்டுவதற்கு தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

1979 ம் ஆண்டிலிருந்து 5 ஆண்டுக்குள் 6ஆயிரத்து 451 வீடுகள் கட்ட மத்திய அரசு ரூ. 675 லட்சம் மான்யம் வழங்குகிறது.

மத்திய அரசின் மான்யத்துடன் தமிழக அரசு பெரும் பங்கு பணத்தைப் போட்டுப் புதிய வீடுகளைப் போலீசாருக்காகக் கட்டி வருகிறது. அதையொட்டி திருச்சி, சேலம் உதகையில் 96 லட்சத்து 20 ஆயிரம் ரூபாய் செலவில் வீடுகள் கட்ட தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

### எங்கே, எத்தனை?

சேலத்தில் 9 லட்சத்து 20 ஆயிரம் ரூபாய் செலவில் 28 குடியிருப்புகளும், உதகையில் 59 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் செலவில் 120 குடியிருப்புகளும் திருச்சி மாவட்டம் கொட்டப்பட்டு என்னும் இடத்தில் 27 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் செலவில் 84 குடியிருப்புகளும் கட்டுவதற்காக கடந்த ஜூன் மாதத்தில்அனுமதி வழங்கியுள்ளது.

இத்திட்டத்திற்காக மத்திய அரசு ரூ.15 லட்சம் மான்யம் அளிக்கிறது. மீதி 80 லட்ச ரூபாயை தமிழக அரசு அளிக்கிறது.

ஒரேகுடும்பத்தைச்சேர்ந்த

## ஆறு பேர் பயங்கர படுகொலை

கொச்சி, ஜூலை 10— கேரளத்தில்கொச்சி அருகே ஒரே குடும்பத்தைச் சேர்ந்த 6 பேர் பயங்கரமாகப் படுகொலை செய்யப்பட்டனர்.

கொச்சியில் இருந்து 40 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கீச்சேரி என்ற இடத்தில் இந்தப் படுகொலை நடந்துள்ளது.

இந்தக் கொலை சம்பந்தமாக முரளி (வயது 23) என்பவரை போலீசார் கைது செய்துள்ளனர்.

இவர் கொலையுண்ட ஸ்ரீதரன் என்பவரின்மகன்.

தாய், தகப்பன் சகோதரி, தாத்தா, பாட்டி, சித்தப்பா ஆகியோரை முரளி கொலைசெய்ததாகக் கூறப்படுகிறது.

கொலைக்குக் காரணம் குடும்பத் தகராறு என்றும் சொல்லப்படுகிறது.



அமைச்சர் குழந்தைவேலு தகவல்

# மாணவர்கள் கல்வித் தரம் உயர அரசு நடவடிக்கை

சென்னை, ஜூலை 10— சென்னை மாநகராட்சி பள்ளிகளில் படிக்கும் மாணவர்களின் கல்வித் தரத்தை உயர்த்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். பிப்ரவரி மாதம் முதல் ஏப்ரல் மாதம் வரையிலான தேர்வு காலங்களில் எந்த ஆசிரியரும் விடுப்பில் செல்லக் கூடாது என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

சென்னை மாநகராட்சி பள்ளிகளின் கல்வித் தரத்தை உயர்த்தவும் மாணவர்கள் அதிக அளவில் பள்ளி இறுதி ஆண்டு தேர்வில் வெற்றிபெறவும் எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் குறித்து மாநகராட்சி பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களுடன் அமைச்சர் குழந்தைவேலு ஆலோசனை நடத்தினார்.

மொத்தமுள்ள 34 தலைமை ஆசிரியர்களில் ஒரு சிலரைத் தவிர மற்ற அனைவரும் இந்த கூட்டத்தில் பங்கேற்றார்கள்.

கல்வித்தரத்தை உயர்த்துவதற்கான யோசனைகளை தெரிவிக்குமாறு தலைமை ஆசிரியர்களை அமைச்சர் கேட்டுக் கொண்டார்.

ஆசிரியர்கள் பலர் பிப்ரவரி மாதம் முதல் ஏப்ரல் மாதம் வரை உள்ள காலங்களில் விடுப்பில் செல்வதால் பாடங்களை சரிவர நடத்த முடியவில்லை என்றும், அந்த காலங்களில் விடுப்பு மறுக்கப்படவேண்டும் என்றும் தலைமை ஆசிரியர்கள் கோரினார்கள்.

தலைமை ஆசிரியர்களின் கருத்துக்களைக் கேட்ட பிறகு அமைச்சர் குழந்தைவேலு பேசிய போது கூறியதாவது:-

தலைமை ஆசிரியர்களுக்கு அதிக அதிகாரங்கள் அளிப்பது பற்றி பரிசிலனை செய்யப்படும். விரைவில் இதற்கான உத்தரவு பிறப்பிக்கப்படும்.

### கடும் நடவடிக்கை

பிப்ரவரி முதல் ஏப்ரல் மாதம் வரையில் எந்த ஆசிரியரும் தேவைஇல்லாமல் விடுப்பில் செல்லக் கூடாது மருத்துவ விடுப்பு தவிர வேறு எந்த விடுப்பும் அவர்களுக்கு அளிக்கக்கூடாது.

ஒவ்வொரு ஆண்டும் 40 சதவிகிதம் மாணவர்களாவது தேர்வு பெறும் வகையில் ஆசிரியர்கள் கடமை ஆற்றவேண்டும், இல்லை என்றால் தக்கநடவடிக்கை எடுக்கப்படும்.

ஆசிரியர்கள் தலைமை ஆசிரியர்களின் சொல் கேட்டு நடக்க வேண்டும், இல்லை என்றால் மறுக்கும் ஆசிரியர்கள் பற்றி தலைமை ஆசிரியர்கள் புகார் செய்தால் நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

இந்தக் கூட்டத்தில் மாநகராட்சி ஆணையாளர் தனி அதிகாரி, கல்வி அதிகாரி ஆகியோரும் பங்கேற்றார்கள்.

ரேஷன் கடையில்

## புகார் புத்தகம்

சென்னை, ஜூலை 10— நியாய விலைக்கடைகளிலிருந்து இன்றியமையாப் பொருட்களை குடும்ப அட்டைகள் மூலம் வாங்குவதில் பொதுமக்களுக்கு குறைபாடுகள்இருந்தாலோ அல்லது பொது விநியோக முறையை மேலும் சிறந்த முறையில்நடத்த யோசனைகள் இருந்தாலோ அவற்றைத் தெரியப்படுத்த ஒவ்வொரு நியாய விலைக் கடையிலும் புகார் புத்தகம் ஒன்று பாராமரிக்கப்பட்டு வருகின்றது.

பொதுமக்கள் இந்த வசதியைப் பயன்படுத்திக் கொண்டு தங்களது குறைகளை அல்லது யோசனைகளை அப்புத்தகத்தில் எழுதலாம் என்று அரசு அறிவித்துள்ளது.

ஆக்கூர் தொகுதியில்

## கழகப் பொதுக் கூட்டம்

தஞ்சை, ஜூலை 10— மாயவரம் ஆக்கூர்கிளை அனைத்திந்திய அண்ணா தி.மு, கழகம் சார்பில் கழகப் பொதுக்கூட்டம் இன்று(10ந்தேதி)வெள்ளிக் கிழமை மாலை ஆக்கூர் நேரு சதுக்கத்தில் எம். பெரியசாமி தலைமையில் ஓ.ஏ.கே. கமாலுதீன் முன்னிலையில்நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் அரசு தலைமைக் கொறடா திருப்பூர் மணிமாறன், என். விஜயபாலன் எம். எல். ஏ. கலையரசன் எம். எல். ஏ, கோவி. நாராயணசாமி, மாயூரம் தம்பி சிவம், ராமகிருஷ்ணன், கலியபெருமாள், ஜெயராமன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.



புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர்.மன்றம் சார்புமன்றங்கட்கு

## வேண்டுகோள்

மன்றங்களைப் பதிவு செய்ய அனுப்புகின்ற தோழர்கள் அந்த மன்ற நிர்வாகிகளின் கழக உறுப்பினர் எண்களையும், கழக அமைப்பில் எத்தனை ஆண்டுகாலம் உறுப்பினர்களாக இருக்கின்றீர்கள் என்கிற விவரத்தினையும் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

ஏற்கனவே பதிவு செய்ய தலைமை மன்றத்தோடு தொடர்பு கொண்ட தோழர்கள் மேற்கண்ட விவரங்களையும் எழுதி அனுப்பவேண்டும். அறிவிக்கப்பட்டுள்ள விதிமுறைகளுக்கு ஏற்றவாறு முழு விவரங்களையும் அனுப்பியுள்ள மன்றங்களுக்கு ஜூலை 15-ந் தேதி முதல் பதிவு சான்றிதழ்கள் அவர்களது ஊருக்கு நேரிடையாக அனுப்பி வைக்கப்படும்.

மன்றங்கள் பதிவு செய்ய கடைசி தேதி ஜூலை 15-ம்நாள். மன்ற பதிவுகள் முடிவுற்ற பின்னர் ஒன்றிய. நகர மன்ற அமைப்பு நிர்வாகிகள் அறிவிக்கப்படும்

ஆர்.சவுந்தரராசன் எம்.எல்.ஏ. பி.முசிறிப்புத்தன் எம்எல்ஏ
பொதுச்செயலாளர் தலைவர்
அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம்

## விற்பனையாளர்கட்கு

ஜூன் மாதப்பட்டியல் தொகையினை இதுவரை அனுப்பாத விற்பனையாளர்கள் உடனடியாக தொகையினை பாக்கியின்றி அனுப்பிட வேண்டும். தொகை அனுப்பாத விற்பனையாளர்களுக்கு முன் னறிவிப்பின்றி பிரதிகள் அனுப்புவது நிறுத்தப்படும் என்பதனைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

விநியோக நிர்வாகி
—அண்ணா

# துணைவேந்தர் நியமனம்: கவர்னர்-கேரள அரசு மோதல்

திருவனந்தபுரம், ஜூலை 10— கேரள பல்கலைக் கழகத் துணைவேந்தர் நியமனம் சம்பந்தமாக கவர்னர் ஜோதி அம்மாள் செயலில், கேரள அரசு அதிருப்தி கொண்டுள்ளது.

கேரளப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக டாக்டர் ஏ. வி. வர்கீசை கேரள கவர்னரும், பல்கலைக்கழக வேந்தருமான ஜோது அம்மாள் நியமித்தார். அவ்வாறு நியமிப்பதற்கு முன், கேரளஅரசை ஜோதி அம்மாள் கலந்தாலோசிக்கவில்லை என்று கேரளசட்டசபையில்கல்வி அமைச்சர் பேபிஜான் கூறினார்.

துணைவேந்தர் நியமனம் சம்பந்தமாக கேரள சட்டசபையில் 2 மணி நேரம் காரசாரமானவிவாதம் நடந்தது. இறுதியில் கல்வியமைச்சர் பேபிஜான் பேசும்போது "துணை வேந்தர் நியமனம் பற்றிய சட்டம் எப்படி இருந்தாலும்.சில மரபுகளை கவர்னர் கடைப் பிடித்திருக்க வேண்டும்" என்று குறிப்பிட்டார்.

சட்டத்தைவிட, மரபு ஜனநாயகத்தைத் தழைத்தோங்கச் செய்கிறது என்றார் பேபிஜான்.

அரசின் கருத்து ஆளுநருக்கு தெரியப்படுத்தப்படும் என்றும் துணை வேந்தர் நியமனம் பற்றிய சட்டத்தை தேவைப்பட்டால் திருத்துவது பற்றி ஆலோசிக்கப்படும் என்றும் பேபிஜான் கூறினார்.

துணை வேந்தராக நியமிக்கப்பட்டுள்ள வர்கீஸ் அமெரிக்கப் பிரஜை என்று சிலர் கூறினார்கள்.

வர்கீஸ் அமெரிக்க கல்லூரியில் வேலை பார்க்கிறார். தான் அமெரிக்க பிரஜை இல்லை என்றும் தன்னிடம் இந்திய பாஸ்போர்ட் உள்ளது என்றும் வர்கீஸ் கூறினார்.